26th March 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த பிரச்னையில் நகரங்களில் தான் முதலில் இந்த திட்டத்தை கொண்டு வரவேண்டுமென்று எண்ணி இதை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : தலைவர் அவர்களே, ஏற்கனவே நகரங்களில் சேரிகள் அதிகமாக இருப்பது தெரியும். ஆனால் மேலும் மில்கள் அதிகமாக ஆரம்பிக்கப்படும் இடங்களில் இந்த ஸ்லம் ஏரியாக்கள் அதிகமாக உண்டாகிறது. மதுரைப்பக்கத்தில் இம்மாதிரி மில்கள் ஆரம்பிக்கப்படும்பொழுது பக்கத்திலுள்ள பள்ளங்களில் குடிசைகளை கட்டிக்கொள்கிறார்கள். இதனால் அசுத்தம் ஏற்படுகிறது. ஆகவே மில்களுக்கு லைஸென்ஸ் கொடுக்கும்பொழுது அதே நேரத்தில், டௌன் பிளானிங் பிரகாரமோ அல்லது ஹௌஸிங் பிளானிங் பிரகாரமோ ஏதாவது ஒரு திட்டத்தையும் கொண்டு வருவதற்கு சர்க்கார் ஏதாவது முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நாட்டில் பல இடங்களிலும் இன்னின்ன இடத்தில் இம்மாதிரிப்பட்ட வீடுகள் கட்டிக்கொள்ள வேண்டும் என்று டௌன் பிளானிங் ஸ்கீம் இருக்கிறது. அதையும் மீறி கட்டுகின்றவர்களை தடுப்பதற்காக குடிசையை பிரிப்பது போன்ற காரியங்களில் இறங்கும்போது பல கஷ்டங்களும் ஏற்படுகிறது. அதனால் தான் இந்த நெருக்கடி ஏற்படுகிறது.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், சென்னையை தவிர்த்து இதர நகரங்களில் இந்த திட்டம் கொண்டு வரப்படுமா என்பதைப்பற்றி கேட்ட சமயத்தில் இதைப்பற்றி விவாதம் நடக்கும்போது பேசிக்கொள்ளலாம் என்று சொன்னார்கள். அப்படியானால் இதர நகரங்களில் இதை கொண்டு வருவதற்கு சர்க்காரிடத்தில் திட்டங்கள் ஒன்றுமில்லையா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : நான் மீண்டும் அதைத்தான் சொல்லுகிறேன். இந்த மான்ய கோரிக்கை வரும்பொழுது அந்த மந்திரி இதற்கு பதில் அளிப்பார்.

SRI T. S. RAMASWAMY PILLAI : இந்த திட்டத்திற்காக மத்திய சர்க்கார் 168 லட்சம் ரூபாய் செலவிட போகிறதாக சொன்னார்கள். இந்த தொகை நமது ராஜ்யம் முழுவதிற்குமா அல்லது சென்னை நகரத்திற்கு மாத்திரமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை நகரத்திற்கு மாத்திரம்தான்.

SRI T. S. RAMASWAMY PILLAI : As there is likely to be great delay in improving all the slums, will the Government come forward to give some immediate relief by way of providing public convenience and water facilities in all the slums?

THE HON. SRI R. VENKATARAMAN : That we considered; but it appears that it will be a perpetuation of the slums. It is better to clear them rather than to provide one or two amenities and make them worse.

*Highways.*

*415 Q.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government have issued any order prohibiting the planting of posts or digging of holes in highways, roads and streets in municipal towns and Panchayat villages?

[26th March 1958

THE HON. SRI P. KAKKAN : Orders have been issued regulating the planting of posts and digging of holes in roads under Government control. According to these orders the poles should be located ordinarily at a minimum distance of 22 feet from the centre of National and State Highways and 17 feet of Major District Roads and other roads. The provisions in the Madras City Municipal Act, 1919, the Madras District Municipalities Act, 1920, the Madras District Boards Act, 1920, and the Madras Village Panchayats Act, 1950, as the case may be, also prohibits the digging of holes and causing obstructions in public roads and streets under control of the respective local bodies without the permission of the Executive Authority of the local body concerned.

SRI S. LAZAR : ஸார், இப்பேர்ப்பட்ட தடையிருந்தபோதிலும் நகரங்களிலுள்ள சில பெரிய பெரிய ரஸ்தாக்களில் கல்யாண காலங்களிலும், மற்ற காலங்களிலும் பந்தல்கள் போடப்படுகின்றன. அந்த சமயத்தில் பந்தல்கள் போடுவதற்கு புது ரஸ்தாக்களில் குழி பறிக்கப்படுகின்றன. இதை தடுப்பதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுக்கும் ?

THE HON. SRI P. KAKKAN : பந்தல்கள் போடும்போது ரஸ்தாக்களில் போகும் பிரயாணிகளுக்கு யாதொரு தீங்கும் ஏற்படாதவாறு அவர்களுடைய சௌகர்யத்தைப் பார்த்துத்தான் அனுமதி கொடுக்கப்படுகிறது.

SRI V. SANKARAN : இவ்வித அனுமதி இல்லாமல் மதுரை போன்ற நகரங்களில் சில அரசியல் கட்சிகள் சில வட்டாரங்களில் அந்த வட்டாரம் தங்களுக்கு கிடைத்துவிட்டது மாதிரி நினைத்துக்கொண்டு பொது ரஸ்தாக்களிலும் எலக்ட்ரிக் கம்பங்களிலும் போன் கம்பங்களிலும் தங்களது கொடியை நட்டுக்கொண்டிருக்கிறார்கள். இதை தடுப்பதற்கு சர்க்காரிடத்தில் ஏதாவது விதி இருக்கிறதா ? இல்லையென்றால் இதை தடுப்பதற்கு ஏதாவது விதியை போடுவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் ரோடு விதிகளுக்குப் புறம்பாக எங்கெல்லாம் இம்மாதிரி கம்பங்கள் ஊன்றியிருக்கிறார்கள் என்றுள்ள தகவலை அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டுவந்தால் அதன்பேரில் நடவடிக்கை எடுக்கப்படும்.

SRI K. ANBAZHAGAN: தலைவர் அவர்களே, அரசாங்கத்தின் நெடுஞ்சாலை பாதுகாப்பின் கீழ் மின்சார இலாகாவும் பொது மராமத்து இலாகாவும் ரோடுகளின் நடுவே குழி வெட்டி தங்களுடைய கடமைகளை நிறைவேற்றுகின்ற முறையில் வேலைகளை செய்கிறார்கள், இவ்விதம் பழுது பார்க்கப்பட்டபின் ஒரு இலாகாவால் வெட்டப்பட்ட குழி மற்றொரு இலாகாவால் மூடப்படுவதற்கு விடப்படுவதால் மக்களுக்கு கஷ்டங்கள் ஏற்படுகிறது. இவ்விதம் ஒரு இலாகா மற்றொரு இலகாவுக்கு குழி வெட்டுவதை தடுப்பதற்கு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் நினைத்திருப்பது முற்றிலும் தவறு. மின்சார இலாகாவும் ஹைவேஸ் இலாகாவும் சேர்ந்து தான் வேலைசெய்கிறது.

SRI A. GOVINDASAMY : சில முனிசிபல் நகரங்களில் சில கட்சிகள், அதாவது காங்கிரஸ் கட்சி கொடிகளை நட்டால் அதை ஆட்சேபிப்பது கிடையாது. மற்ற கட்சிகள் நட்டால் அதை ஆட்சேபிக்கிறார்கள். ஏன் இந்த பாரபட்சம் காட்டப்படுகிறது ?

MR. SPEAKER : The question is out of order.

26th March 1958]

**Sri V. K. KOTHANDARAMAN** : மதுரையில் சில கட்சிகள் கொடிகளை நட்டிருப்பதாக சொன்னார்கள் நண்பர் அவர்கள். அதே மதுரை நகரத்தில் காங்கிரஸ் கட்சியும் கொடிகளை நட்டிருக்கிறது. இதற்கு மாத்திரம் என் விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது ?

**Mr. SPEAKER** : இந்த கேள்வியை அனுமதிக்கமுடியாது. கோவிந்தசாமி அவர்களுடைய கேள்விக்கே அனுமதி கொடுக்க மறுத்தேன். அப்படியிருக்கும்பொழுது இதற்கு மாத்திரம் எப்படி அனுமதி கொடுக்க முடியும் ?

*Provident Fund.*

* 416 *Q.*—**Sri N. K. PALANISAMI** : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government have paid Provident Fund to the workers who were transferred or proposed to be transferred to the Electricity Board?

**The Hon. Sri V. RAMIAH** : No, Sir. It is not proposed to pay the Provident Fund amounts standing to the credit of the workers, to them consequent on their transfer to State Electricity Board. The question of transferring the balances standing to their credit to the Madras State Electricity Board which will maintain the Fund is separately under consideration.

**Sri N. K. PALANISAMI** : ஸார், கவர்ன்மெண்டிலிருந்து போர்டுக்கு வேலைகள் எல்லாம் மாற்றப்படும்பொழுது என் பிராவிடண்ட் பண்ட் போன்றவைகளை மாற்றக்கூடாது என்று கேட்க விரும்புகிறேன்.

**The Hon. Sri V. RAMIAH** : இவைகளையும் போர்டுக்கு கொடுக்கவேண்டுமென்றுதான் ஆலோசித்து வருகிறோம்.

*Lands under cultivation.*

* 417 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN** : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the extent of lands under cultivation of (1) paddy, (2) sugarcane and (3) dry crops, in the North Arcot district from 1952 to 1957 taluk-war; and

(*b*) the extent of cultivable land which remains uncultivated?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

Taluk-wise particulars regarding the extent of cultivable land which remains uncultivated in the district are not available. Hence, information furnished is for the district as a whole.

**Sri A. A. RASHEED** : What is the main reason for nearly five lakh acres of land remaining fallow in the North Arcot district?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : The information that I have is all cultivable land that is available is under cultivation.

---

[a] Printed as Appendix II on pages 553–560 infra.